REGD No. TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 812818 4 பக்கம் விலை 30 காசு

**காரியம்**

நாட்டில் நிலையான காரியங்கள் கட்சி வேறுபாடு இலலாமல நடககவேண்டும்,

-பேரறிஞர் அண்ணா



நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**பேச்சு**

சுருக்கமாகப் பேசு வோரின் வார்த்தை களில் ஆழ்ந்த சிந்தனை தேங்கி இருக்கும்.

-அண்ணல் காந்தி

மலர்: 4 சென்னை 1—11—1979 வியாழன் (★) ❋ ● ❋ (✶) வெளியூர் 2-11-1979 வெள்ளி இதழ்: 16



தமிழ்நாட்டைப் பொறுத்தவரை

# பதவியிலிருந்துஇறங்கிய கட்சி மீண்டும் பதவிக்கு வந்த வரலாறு இல்லை

## மதுரை மேயர் முத்து விளக்கம்

**பசும்பொன், நவ. 1- ஒருமுறை பதவியை விட்டு இறங்கியவர்கள் தமிழகத்தில் மீண்டும் பதவிக்கு வந்த வரலாறு கிடையாது என்று மதுரை மாநகராட்சித் தந்தை முத்து கூறினர்.**

பசும்பொன்னில் நடந்த முத்துராமலிங்கத் தேவர் பிறந்தநாள்விழாவில்மதுரை மேயர் முத்து பேசுகையில் தமிழகத்தில் எந்த ஆட்சியிலும் நடக்காத வகையில் புரட்சித்தலைவர் ஆட்சியில் போராட்டங்கள் தூண்டி விடப்படுகின்றன என்றும் குற்றம் சாட்டினர்.

மதுரை மாநகராட்சித் தந்தை முத்து பேசியதாவது-

தேவர் மறைந்த ஆண்டுக்கு முதல்ஆண்டுத் தேர்தல் வந்தது 1962ம்ஆண்டு நான்மதுரைத்தொகுதியில் போட்டியிட்டேன். அப்போது திமுகவுக்கும் பார்வர்டுபிளாக்கிற்கும் தேர்தல் உறவு இல்லை.

அப்போதுபில்லப்பனுக்கு ஆதரவு தரும்படி அவரும் தென்னரசுவும் திருச்சி சென்று தேவரிடம் கேட்டனர்.

### கட்டி வைத்து சுடுவதா?

நீங்கள் வேறுகட்சியினர் எப்படி ஆதரவு தரமுடியும் என்று சொல்லி அனுப்பிவிட்டார்.

இதனல் நான் போய் எனக்கு ஆதரவு தரும்படி கேட்கவில்லை. ஆனல் கண்ணகி பத்திரிகையில் இரண்டரைப் பக்கம் என்னை ஆதரித்து அறிக்கை வெளியிட்டார்.

பிறகு அவருக்கு நான் மாலை அணிவித்து வாழ்த்துக்கேட்டேன். என் மீது அவ்வளவு பாசம் வைத்திருந்தார்.

அவர் அடிக்கடி சொல்லுவார் முத்துவை ஆண்டவன் தான் காப்பாற்ற வேண்டும் என்று.

முதுகளத்தூர் கலவரம் பற்றி அப்போது நான் தைரியமாக தமிழகம் முழுவதும் சுற்றி வந்து பிரச்சாரம் செய்தேன்.

தவறு செய்பவர்களை சுட்டுக் கொல்வது நீதி தானா? போலீஸ்நீதிமன்றம் போன்றவை ஏன் இருக்கின்றன என்று கேட்டுப் பேசினேன்.

திருவண்ணாமலை மாநாட்டில் முதல் கண்டன தீர்மானத்தைக் கொண்டு வந்தேன். இதற்கு ப. உ. ச. வழிவகை செய்து கொடுத்தார்.

கட்டி வைத்துச் சுடும் அக்கிரமம் நடந்ததைக் கண்டு உணர்ச்சி வசப்பட்டேன்,

நாட்டில் விடுதலைக்காக பாடு பட்ட மாவீரர் தேவர் அவரது பேச்சைக் கேட்டு மக்கள் சுதந்திரப் போராட்ட உணர்ச்சி பெற்றனர்கள்.

அந்தக் காலத்தில்தைரியமாக மேடைகளில் பேசியவர் தேவர் அவரது பேச்சு தியாகம் நாட்டு விடுதலைக்குப் பயன்பட்டது ஆனல் இதை மறந்து அவரைப் பழிவாங்க முற்பட்டனர்.

### இருநூறு போராட்டம்

விடுதலை கிடைத்து 32 ஆண்டுகள் ஆகின்றன இன்னமும் கிராமங்களில் சாலை இல்லை. பாதுகாக்கப் பட்ட குடிநீர் இல்லை.

இதைக்கூட முந்தைய ஆட்சி செய்து தரவில்லை.

ஆனல் புரட்சித்தலைவர் ஆட்சி இந்த வசதிகளைச் செய்துகொடுத்துவருகிறது ஏழை எளிய மக்களை வாழ வைக்க திட்டமிட்டு வருகிறது இதனை செயல்படுத்தும்போது எத்தனைப் போராட்டங்கள்?

இரண்டேகால் ஆண்டில் 200 போராட்டங்கள் ஜஸ்டிஸ்கட்சி ஆட்சி காங்கிரஸ் ஆட்சி, தி. மு. க. ஆட்சிக்காலங்களில் இது போல போராட்டங்கள் நடந்தது இல்லை.

எதற்கு எடுத்தாலும் போராட்டம் அவரை கீழே இறக்கி அங்கே தான் உட்கார வேண்டும் என்று போராட்டம் நடத்துகிறார் கருணநிதி.

24மணி நேரமும் போராட்டம் நடத்தினல் பாதிப்புயாருக்கு? புரட்சித்தலைவரைத் தவிர தகுதியான தலைவர் யார் இருக்கிறார்கள்? அவரதுதிட்டங்களை தடுக்க ஒரு கூட்டம் இருக்கிறது.

### அசைக்க முடியாது

இன்று தேவர்உயிரோடு இருந்து இருந்தால் புரட்சித்தலைவர் அரசை ஆதரித்து பல காரியங்களை செய்து இருப்பார்.

தேவர் மறைந்த பிறகு நரிக் கூட்டம் ஒன்று சேர்ந்து ஏழைகளை வாழ வைக்கும் புரட்சித்தலைவர் ஆட்சியை அகற்றி அந்த இடத்தில் தான் உட்கார கனவு காணுகிறது.

ஒருமுறை கோட்டையை விட்டு இறங்கியவர் மீண்டும் பதவிக்கு வந்த சரித்திரம் இல்லை.

போராட்டங்களை தூண்டிவிடுபவர்கள் யார் யார் என்று பார்க்கவேண்டும்.

பாடுபடும் லட்சோப லட்சம் மக்கள் புரட்சித் தலைவர் பக்கம் இருக்கிறார்கள் யார் எந்த போராட்டத்தைத் தூண்டினலும் புரட்சித் தலைவர் அரசை ஆட்டவோ அசைக்கவோ முடியாது.

இவ்வாறு மதுரைமேயர் முத்து பேசினர்.

நமது இந்த கூட்டை யாராலும் பிரிக்க முடியாது

கமிஷன்கள்

# கருணநிதிக்கு அரசியல்விபத்து

ஏதோ விபத்தால் அமைந்த ஆட்சியாம் கழக அரசு!

"அரசியலில் ஓர் அனுச்சாரம்- ஓர் விபத்து என்று மக்களால் ஒதுக்கப்பட்ட கருணநிதி மக்கள் தீர்ப்பை "விபத்து" என்று கொச்சைப் படுத்துகிறர்; கேவலமாக்குகிறர்.

திண்டுக்கல்லிலிருந்து வரிசையாக அரசியலில் விபத்துக்களைச் சந்தித்து முடமாகிவிட்ட கருணநிதி "ஏதோ விபத்தால் அமைந்த ஆட்சி" என்கிறர்.

தேர்தல் நெருங்க நெருங்க கருணநிதிக்கு இன்னும் உளறல் அதிகம் எடுக்கும்.

ஆளும் கட்சியைத் திட்டுவார்-தலைவர்களைத் திட்டுவார்!

மக்களையும் ஏசுவார்!

ஐயோ பாவம் என்று சொல்லியபடியே அணைத்தையும் தாங்கிக்கொள்வோம்.

# கருணநிதி பல்டி

காவல் துறை வேலை நிறுத்தத்தைத் தூண்டி விட்டவர் கருணநிதி!

போலீசார் வேலை நிறுத்தம் நீடிக்க வேண்டும் என்பதில் அவருக்கு இருந்த தணியாத ஆசையை அவருடைய பேச்சுக்கள் வெளிக்காட்டின!

"வேலை நிறுத்தத்தைத் கைவிடுங்கள்" என்று நயினர்தாஸ் அறிக்கை விடுகிறர்!

மெஜாரிட்டி உள்ள நயினர்தாசை அங்கீகரிக்க வேண்டும் என்று கூறிய கருணநிதி நயினர்தாஸ் வேண்டுகோளை ஏற்க்கக்கூடாது என்று அனைத்து தொழிற்சங்கம் என்ற பெயரில் நடந்த கூட்டத்தில் கூறினர்.

தலைவெட்டிப் பேச்சுக்களை கருணநிதி பேசி, போராட்டம் நிற்கக் கூடாது என்று வற்புறுத்தினர்.

போலீஸ் போராட்டத்தை நான் தூண்டவில்லை"

"ஆனல் போலீசார் போராட வேண்டும்" நிறுத்தக் கூடாது என்று கருணநிதி கூறினர்.

எப்படி?

"கருணநிதி யோக்கியர்தான். ஆனல் லஞ்சபேரம் நடத்தி பங்களாக்கள் வாங்கினர்.

"கருணநிதி நாணயமானவர்தான்!

ஆனல் லஞ்சம் வாங்கிய கையோடு பூச்சி மருந்து தெளிக்க கம்பாட்டா நிறுவனத்துக்கு அனுமதி அளித்தார்" என்றுசொல்கிறமாதிரி போராட்டத்தை தூண்டவில்லை என் சொல்லி சொல்லியே தனதுகுள்ள நரிவேலைகளைக்காட்டினர்.

அந்த விவரங்கள் எல்லாம் ரகசியப்புலனய்வுத் துறையிடம் இருக்கும். அதுபற்றி நாம் அதிகம் கூறத் தேவை இல்லை.

ஆனல் கருணநிதி இப்போது 'திடீர்' பல்டி அடிக்கிறரே? என்ன சங்கதி?

"நான் காவல்துறை வேலை நிறுத்தத்தை ஆதரிப்பவன் அல்ல. அது தேவைதானு? அந்தக் கேள்வி என்னுடைய உள்ளத்தை குடைந்து கொண்டிருக்கிறது.

-என்கிறர் கருணநிதி.

-என்ன விஷயம்?

பஸ்சை எரித்தாயிற்று? காவல் துறையினரும்-அவர்களது குடும்பத்தினரும்-கருணநிதியைச் சபிக்க ஆரம்பித்தனர்.

இப்போது அதை ஆதரிக்கவில்லை என்கிறர்.

கேள்வி மனதைக் குடைகிறதாம்?

கருணநிதியால் தூண்டப்பட்டவர்களே கருணநிதியை எதிர்க்கும்போதுதான் அவர் மனது குடைய ஆரம்பிக்கும்!

இப்படிப்பட்ட "குடைசல்" பேர்வழிக்குக் காலம்தான் பதில்சொல்ல வேண்டும்!

கழக அமைச்சர்

# பி.டி. எஸ்சுக்கு தி. மு. க. பாராட்டு

சென்னை, நவ. 1- எந்தப் பிரச்சினையைப் பற்றி கடிதம் எழுதினலும் உடனடியாக அமைச்சர் பி. டி. எஸ். பதில் எழுதுகிறர். தகுந்த நடவடிக்கை எடுக்கிறர்என்று தி. மு. க. உறுப்பினரும் முன்னள் அமைச்சருமான சாதிக்பாட்சா சட்டசபையில் பாராட்டினர்.

அவர் கூறியதாவது-

"நான் மாண்புமிகு பி. டி. சரஸ்வதிக்கு கடிதம் எழுதினேன். உடனே பதில் வருகிறது நடவடிக்கையும் எடுக்கிறர்கள். அதற்காக என்னுடைய பாராட்டுக்கள்."

இவ்வாறுசாதிக்பாட்சா தெரிவித்தார்.

# சென்னைக்கு புயல் அபாயம்

## கடலோர மக்கள் பாதுகாப்பான இடத்துக்குச்செல்ல வேண்டுகோள்

**சென்னை, நவ. 1-வங்கக் கடலில் உருவான புயல்சின்னம் சென்னையில் இன்று மாலை கரையைக் கடக்கிறது. இதனல் சென்னை மற்றும சில தமிழக கடலோரப் பகுதிகளில் பலத்தமழையும் பெய்யும். கடலோரத்தில் தாழ்வான பகுதிகளில் இருப்பவர்கள் பாதுகாப்பான இடங்களுக்குச் செல்லுமாறு வேண்டுகோள் விடப்பட்டுள்ளது.**

வங்கக் கடலில் சென்னையில் இருந்து கிழக்கே 150 கிலோ மீட்டர் தூரத்தில் உருவாகி இருக்கும் புயல் சின்னம் சென்னையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது.

இந்த புயல் சின்னம் ஆந்திர பகுதிக்கு சென்று விடும் என்று நேற்று இரவு அறிவிக்கப்பட்டது.

ஆனல் சென்னையில் கரைகடக்கும் என்று இன்று காலை வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்தது.

புயல் இன்று மாலையிலிருந்து இரவுக்குள் சென்னையில் கரையைக் கடக்கும். இதையொட்டி சென்னையில் காற்றுடன் பலத்த மழை பெய்யலாம் என்று வானிலை ஆராய்ச்சி நிலையம் அறிவித்துள்ளது.

புயல்சின்னம் உருவாகியிருப்பதையொட்டி இன்று அதிகாலையிலிருந்து சூரிய ஒளியையே காணமுடியவில்லை. சிறு தூறலுடன் விட்டு விட்டு மழை பெய்து கொண்டிருந்தது.

இது இன்றும் நாளையும் நீடிக்கலாம்.

இன்று மாலை சென்னை கடற்கரையை ஒட்டியுள்ள பகுதிகளில் பலத்த காற்றுடன் மழைபெய்யும்.

### மீனவர்க்கு எச்சரிக்கை

எனவே மீனவர்கள் கடலுக்குள் மீன் பிடிக்கச் செல்ல வேண்டாம என்றும் கடற்கரை பகுதியில் குடியிருக்கும் குடிசை வாழ்மக்களும், தாழ்வான தண்ணீர் தேங்கும் பகுதிகளில் குடியிருப்பவர்களும் பாதுகாப்பான இடங்களுக்குச் சென்று விடுமாறும் கேட்டுக் கொள்ளப் பட்டுள்ளனர்.

# நயினர் தாஸ் ஜாமீனில் விடுதலை

சென்னை, நவ. 1- தமிழ்நாட்டில் சிலஇடங்களில் போலீசார்போராட்டம் நடத்தி வந்தனர். இந்த போராட்டத்தைத் தூண்டியதாக போலீஸ் சங்கத் தலைவர் நயினர் தாஸ் கடந்த 24ந் தேதி கைது செய்யப் பட்டார். பிறகு சென்னை கோர்ட்டில் ஆஜர்செய்யப் பட்டு வேலூர் ஜெயிலுக்கு அனுப்பப்பட்டார்.

உடனே அவரை ஜாமீனில் விடுதலை செய்ய வேண்டும் என்று மனு செய்தனர். அந்த மனு தள்ளுபடிசெய்யப்பட்டது.

மீண்டும் நயினர்தாஸ் சார்பில் ஜாமீன் மனு சென்னை தலைமை மெட்ரோபாலிடன் மாஜிஸ்திரேட்டு கோர்ட்டில் நேற்று தாக்கல் செய்யப் பட்டது.

வேலூரிலேயே தங்கி இருக்கவேண்டும் தினமும் வேலூர் தெற்கு போலீஸ் நிலையத்தில் ஆஜராகி கையெழுத்து போடவேண்டும்.

பொதுக்கூட்டங்களிலோ ஆர்பபாட்டங்களிலோ கலந்துகொள்ளக் கூடாது.

போராட்டத்தில் கலந்து கொள்ளும்படி போலீசாரை தூண்டக் கூடாது.

அரசு வக்கீல்தெரிவித்த நிபந்தனைகளுடனும் ரூ. 2 ஆயிரம் சொந்த ஜாமீன் பேரிலும் நயினர்தாசை ஜாமீனில்விட மாஜிஸ்டிரேட்டு உத்திரவிட்டார். இந்த உத்திரவு வேலூர் ஜெயில் சூப்பிரண்டுக்கு அனுப்பப்பட்டது உத்திரவைக் கண்டதும் நயினர் தாஸ் விடுதலை செய்யப்படுவார்.

# புரட்சிதலைவர் பங்கேற்கும் பாக்கூர் சுப்பிரமணியம் மகள் திருமணம்

சென்னை, நவ. 1-கழக சட்டமன்ற உறுப்பினர் பாக்கூர் சுப்பிரமணியத்தின் மகள் திருமணத்தில் முதல்வர் புரட்சித்தலைவர் கலந்துகொண்டு வாழ்த்துகிறர்.

வரும் 7ந் தேதி புதன் கிழமை காலை 6 மணிக்கு சென்னை ஆபட்ஸ்பரி மாளிகையில் திருமணம் நடைபெறுகிறது.

பாக்கூர் சுப்பிரமணியத்தின் மகள் கவுரிலட்சுமிக்கும் சென்னை சீனிவாசனுவின் மகன் லீலாகிருஷ்ணனுக்கும் நடைபெறும் திருமணத்திற்கு முதல்வர் புரட்சித்தலைவர் கழகப் பொதுச்செயலாளர் [illegible] நாவலர், அமைச்சர்கள் [illegible] பண்ருட்டி ராமச்சந்திரன், கே.ஏ.கே., [illegible] டி.எஸ்., ஜி.ஆர்.எட்மண்ட், ஆர்.எம்.வீ., [illegible] கணசாமி, செ. அரங்கநாயகம், கா. காளிமுத்து, ராகவானந்தம், சவுந்தர பாண்டியன், சி.பொன்னையன், ராஜாமுகமது, குழந்தைவேலு, சவுந்தரராசன், பி. டி.எஸ்., சுப்புலட்சுமி ஆகியோர் கலந்துகொண்டு மணமக்களை வாழ்த்துகின்றனர். இரா. மோகனரங்கம் வரவேற்புரை நிகழ்த்துகிறர்.

6-ம்தேதி (செவ்வாய்) மாலை 7மணி முதல் இரவு 9மணிவரை ஸ்ரீதரின் 'நவராக்ஸ்' மெல்லிசை நிகழ்ச்சி நடைபெறுகிறது. ராம்ஜியும் நிகழ்ச்சியில் பங்கேற்கிறர்.

இரவு 9மணி முதல் 11,30 மணி வரை அரசு நர்த்தகி சுவாணமுகி குழுவினரின் நாட்டிய நிகழ்ச்சி நடைபெறுகிறது.

# நாஞ்சிலார் பேச்சு

2-ம் பக்கம்

## பழைய பிரதமராலேயே முடியாதது இங்குள்ளவர்களால் முடியுமா?

# விபத்தில் சிக்கிய இந்திரா காங்கிரஸ் கட்சி

**சென்னை, நவ. 1- இந்திரா காங்கிரஸ் கட்சிக்கு விபத்து எப்படியோ நடந்திருக்கிறது. விபத்திலிருந்து அவர்களாக மீளாவிட்டால் காலம் அவர்களை மீட்கும் என்று நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.**

**போலீசார் எதிர்க்கட்சித்தலைவர்களிடம் வந்திருக்கிறார்கள். முதல்வருக்கு பாதுகாப்பு தாருங்கள்- கோரிக்கையை எங்களிடம் தாருங்கள் என்று எந்த எதிர்க்கட்சித் தலைவராவது சொன்னாரா என்றும் நாஞ்சிலார் சட்டமன்ற மேலவையில் கூறினர்.**

துணை நிதிநிலை அறிக்கையின் மீது மேலவையில் நடந்த விவாதத்துக்கு பதிலளித்து நிதியமைச்சர் நாஞ்சிலார் பேசியதின் முற்பகுதி நேற்று வந்தது தொடர்ச்சி வருமாறு:

கருத்துகளில்லை- அணுகுமுறைகள் இல்லை - என்று சொன்னீர்கள்- அமைச்சர்களுக்கு ஒன்றும் தெரியவில்லை என்று சொன்னீர்கள் பிறக்கும்போது ஆளக் கற்றுக்கொண்டு பிறக்கவில்லை. எல்லாம் தெரிந்தவர்கள் என்று வாதாடுகிறார்கள்.

இருக்கிறவர்களுக்கு எதுவும் தெரியாது என்றுமுத்திரைகுத்திவிட்டுதப்பிக்கப் பார்க்காதீர்கள். எங்களுக்கும் கொஞ்சம் தெரியும்.

சர்க்கார் தவறு செய்திருக்கலாம். வேறு எந்த அரசிலும் எடுக்கப்பட்ட பொருளாதார முடிவு தோல்வி அடைந்ததில்லையா? தவறை ஒப்புக்கொண்டு இந்திரா காந்தி கூடப்பேசினரே!

நமது எண்ணத்திற்கு அப்பாற்பட்ட உலகத்தில் இருந்து கொண்டு பேசாதீர்கள்.

துணைத் தலைவர் சாமிநாதன் பட்ஜெட் விளக்கம் சொன்னர். புள்ளி விவரங்களைத்தருவதில் அவர் கெட்டிக்காரர். சில உதாரணங்கள் சொன்னர்.

அவர் வேண்டுமானால் குடும்பக்கட்டுப்பாட்டில் நாட்டம் கொண்டவராக இருக்கலாம். நாட்டிலுள்ள அனைவரும் அப்படி இருப்பதில்லை.

1965-66 ல் ஆண்டுக்கு 173 கோடி ரூபாய் செலவிட்டோம். 79-80 ல் 849 கோடி ரூபாய் செலவிடப்படுகிறது.

டோம்.

6-வது ஐந்தாண்டு திட்டத்தில் 2 ஆயிரம் கோடி ரூபாய் மாநிலங்களுக்கு ஒதுக்கப்பட்டுள்ளது. தமிழகத்திற்கு அதிகமான தொகை 150 கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறார்கள்.

விகிதாச்சாரத்தின் படி பெற்றதால் நமக்கு இந்த அளவு கிடைத்திருக்கிறது.

மக்கள்தொகைதனிநபர் வருமானவளர்ச்சி இவைகளை கணக்கிட்டு விகிதாச்சார முறையில் ஒதுக்கப்படும் போது உத்திரப்பிரதேசம் பத்துப் பன்னிரெண்டு கோடியைத் தாண்டியிருக்கிறது. அதனல் அதிக தொகை கிடைத்திருக்கிறது.

இந்தத்திட்டம் பற்றி சொன்னபோது பீகார் முதல்வராக இருந்தகர்ப்பூரி தாகூர் வேண்டாம் என்று சொல்ல எழுந்தார். பின்னல் அமர்ந்திருந்த நான் அவரது தோளைப் பிடித்து இழுத்து, முன்பைவிட உங்கள் மாநிலத்திற்கு அதிகத் தொகை கிடைக்கும் என்று சொன்னேன். பின்னர் அமைதியாக இருந்தார்.

அந்தத் திட்டத்தின் மூலம் வரும் பயனை கர்ப்பூரி விலகிவிட்டார் என்றாலும் அந்த மாநிலம் அனுபவிக்கிறது.

பின்னலிருந்து நான் இழுத்ததால் தமிழகம் அனுபவித்துக் கொண்டிருக்கிறது. இந்த திட்டத்திற்கு முன் இருந்தபடி பார்த்தால் 131 கோடி ரூபாய்தான் தமிழகத்திற்குக் கிடைக்கும்.

இந்த அரசு வாதாடிப் பெறவில்லை என்று பேசுகிறீர்கள்- தேர்தலுக்குப் பயன்படும் என்று நிச்சயமாக உங்களுக்குப் பயன்படாது.

தமிழகத்தில் பொருளாதாரப் புரட்சி ஏற்பட்டிருக்கிறது அல்லவா? ஒரு சில பற்றாக்குறையைவைத்துக்கொண்டு ஒட்டு மொத்தமாகப் பேசக்கூடாது.

காட்பாடி நியாய விலைக்கடையில் மிளகாய் விலை கிலோ 8ரூபாய்,பக்கத்தில் தனியார் விலைக்கடையில் ரூ1-60 காசு என்று சொன்னர்கள்.

காட்பாடி மட்டும் தமிழகமல்ல- திண்டிவனம் தமிழகம்ஆகாதா? கண்ணமங்கலம் தமிழகம் ஆகாதா? நாகர்கோவில் தமிழகம் ஆகாதா?

இந்த அரசுதலைநிமிர்ந்து நடக்கத்தக்க வகையில் நடந்து கொண்டிருக்கிறது

இந்தக் கட்சி ஆட்சிக்கு வந்து இரண்டு ஆண்டு 6 மாதங்கள்தான் ஆகிறது.

### முன்னாள் பிரதமராலேயே முடியாதது

மனச்சாட்சி உள்ளவர்கள் அருள்கூர்ந்து எந்த நேரத்தில்- போராட்டம் வெடிக்கிற நேரத்தில்இந்த கட்சி ஆட்சிக்கு வந்தது என்பதை எண்ணிப்பாருங்கள்,

பிரிக்கப் பார்க்கிறேன் என்றார். அது ராமமூர்த்தியால் முடியாது. பழைய பிரதமராலேயே ஆகாதது ராமமூர்த்தியால் முடியப்போகிறதா?

அதிகச் செலவாகிறது என்றார்கள். எஸ்டிமேட் கமிட்டி இல்லையா? பொது கணக்கு குழு இல்லையா? அக்கவுண்டண்ட் ஜெனரல் இல்லையா? இதிலெல்லாம் எதிர்க் கட்சியினரும் இருக்கிறார்களே! தவறு நடக்கிறதா என்று அவர்கள் கண்ணில் எண்ணெ விட்டுக் கொண்டு பார்க்கமாட்டார்களா?

சகட்டு மேனிக்கு பேசுவது பரிகாரம் தேடுவதாக அமையாது.

ஒரு போலீஸ் சங்கம் வைக்க அனுமதி கொடுக்கவில்லை. தனித்தன்மைகளை வைத்துக் கொண்டு, கடமை-சமூக-பொறுப்பை வைத்துக்கொண்டுள்ளவர்கள் ஒழுக்கம் மாறி - ஒரு குறிப்பிட்ட வருக்கு சங்கம் வைக்க அனுமதி கிடைக்கவில்லை என்பதற்காக செயல்படுவதா?

போலீசாரையோ சப்-இன்ஸ்பெக்டரையோ சொக்காயை கழட்டினல் கிழித்தால் அவமானப் படுத்துகிற காரியமாக இருக்கும்.

அவர்கள் சொக்காயை கழட்டிவிட்டு, துப்பாக்கியை எறிந்துவிட்டு முதல்வருக்கு பாதுகாப்பு தரமாட்டேன் என்று சொல்வது எந்த அளவு நியாயம் என்பதை எண்ணிப்பார்க்க வேண்டும்.

### எந்த எதிர்க்கட்சி தலைவர்முயன்றார்

உங்களிடம்(எதிர்க்கட்சித் தலைவர்கள்)வந்திருக்கிறார்கள். முதலமைச்சருக்கு பாதுகாப்பு தாருங்கள். கோரிக்கையை எங்களிடம் தாருங்கள் என்று எந்த எதிர்க்கட்சி தலைவராவது சொன்னார்களா ?

போலீசார் ஆயுதத்தை கீழே போட்டுவிட்டு வன்முறையில் ஈடுபடுகிறஇந்த நேரத்தில் அனைத்துக் கட்சிகளும் ஒன்றாக மிக ஜாக்கிரதையாக இருக்க வேண்டிய காலம் இது.

### கற்பனையாகவும் நடக்காது

பஞ்சாயத்துகளைக் கலைத்தீர்கள். அதுபோல சட்டசபைகளை கலைப்பீர்களா, அதுவாகவே கவிழுமோ என்று ராமமூர்த்தி சொன்னர். இது கற்பனையாகக்கூட பத்து பதினைந்து ஆண்டு காலத்திற்குநினைத்துப்பார்க்க முடியாதது.

### நாஞ்சிலார் வர்ணனை

ராமமூர்த்தி கற்பனையில் இருக்கிறார்.

விபத்து எப்படியோ நடந்திருக்கிறது. விபத்திலிருந்து நீங்கள் (ராமமூர்த்தி) மீளவேண்டும்- நீங்களாக மீளாவிட்டால் காலம் உங்களை மீட்கும்.

நல்ல உறவினை வளர்த்துக்கொள்ள வேண்டும். வினை விதைத்தவர்கள் தினை அறுக்க முடியாது.

நிதியமைச்சர் என்ற முறையில் முதல்வர் சார்பாக உங்களுக்கு உறுதியளிக்கிறேன், மக்கள் அளிக்கும்ஒவ்வொரு சல்லிகாசும் பயனுள்ள முறையில் செலவழிக்கப்படும்.

பிரச்சினை நல்ல முறையில் முடியவேண்டும் என்ற கருத்தில் 95 சதவிகிதம் பேர் பேசினீர்கள்.

நயினார்தாஸ் என்ன ஆனாரோ, எப்படி ஆச்சோ என்று பேசினீர்கள்.

### பயம் உண்டாக்காதீர்

ஏன் நீங்களாக பயத்தை உண்டாக்குகிறீர்கள்? அவர் விருந்தினராக வைக்கப்பட்டிருக்கிறார். முதல்வரைச் சந்தித்துப் பேச இருக்கிறார். அதன் பின் நல்ல முடிவு வரும்.

நம்புங்கள் என்று கேட்கிறேன். எப்படி நம்புவது என்று கேட்கலாம். ஒவ்வொரு சந்தர்ப்பத்தில் ஒருவரை ஒருவர் நம்பியாக வேண்டியிருக்கிறது.

இவ்வாறு நிதியமைச்சர் நாஞ்சிலார் கூறினர்.

★ 6வது5ஆண்டுதிட்டத்தில்அதிகதொகை ரூ.150கோடிஒதுக்கீடு
★ தலை நிமிர்ந்து நடக்கத்தக்க வகையில் நடக்கும் தமிழக அரசு
★ எதிர்க்கட்சித் தலைவர்கள் கடமை என்ன?

### நண்பர்களாக கைகுலுக்க வேண்டாமா?

முத்துசாமி என்னை எந்த அளவுக்குத் தூக்கிவைத்து பேச முடியுமோ அந்த அளவுக்குத் தூக்கி வைத்துப் பேசி, முடிவில் ஏதாவது அறிவிப்பார் என்று சொன்னர்.

முத்துசாமி தூக்கித்தூக்கி வைக்க என்னிடம் ஒன்றுமில்லை. நான் தூக்கிவைக்கப் பணப்பெட்டி இல்லை.

பெட்டியில் இருந்தால் உங்களுக்கு வழங்குவதற்கு இந்த அரசைத் தவிர வேறு எதுவும் முன்னல் இருக்க முடியாது.

நானும் எதிர்க்கட்சித் தலைவரும் நண்பர்களாக இருக்கிறோம். கை குலுக்க வேண்டாமா? எதிரிகளாக்க தேர்தல் இயந்திரத்தைப் பயன்படுத்தக் கூடாது.

'கமிட்டி அமைக்கக் கூடாதா?' என்றெல்லாம் சொன்னர்கள். கமிட்டி அமைப்பு பற்றி நாடாளுமன்றத்தில் விவாதம் நடந்தது. முடிவுக்கு வரவில்லை. அங்கே அப்படி என்றால் நாம் எப்படி இருக்கலாம் என்பதை சிந்திக்கவேண்டும்.

முத்துசாமி அரசாங்க ஊழியர்களுக்கு கவுன்சில் இருக்கிறது; எங்களுக்கும் கவுன்சில் வேண்டும் என்று கேட்டார். உங்களுக்கும் கவுன்சில் உண்டு லெஜிஸ்லேடிவ்கவுன்சில்(மேலவை) உண்டு. அதை நீங்கள் முழுமையாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

மத்திய அரசிடம் பெற வேண்டிய அளவுக்குபணம் பெறவில்லை. பீகார், உத்தரப்பிரதேசம் பெற்ற அளவு பெறவில்லை என்ற கருத்து தெரிவிக்கப்பட்டது.

### தமிழகத்துக்கு அதிக ஒதுக்கீடு

தமிழகத்தின் சார்பில் நானும் முதலமைச்சரும் தேசிய வளர்ச்சிக்கூட்டத்தில் கலந்துகொண்

# வளர்த்த கடா யார்?

"அருமைச் சகோதரர் கலைஞர் எத்தனை பேரை வளர்த்துவிட்டார் என்பது அனைவருக்கும் தெரியும். எங்களது உறவில் சிறிது தொய்வு ஏற்பட்டபோது கலைஞர் பலரை வளர்த்துவிட்டார்.

ஆனல். கலைஞர் வளர்த்த கடாவே அவரது மார்பில் பாய்ந்தது"

-சிவாஜிகணேசன்

அண்ணாவின் கழகத்திற்குவந்து அவரால் அறிமுகபடுத்தப்பட்டு, 'சிவாஜி என்ற பெயரைப் பெற்று-

"அண்ணா ஆணையிட்டால்எத்தனை ஒப்பந்தங்கள் வந்தாலும் தூக்கிஎறிந்துவிட்டு போராட்டத்தில் குதிப்பேன்" என்று லால்குடி மாநாட்டில் முழங்கியவர்...

"தி. மு. க. ஆட்சிக்கு வந்தால் பெண்கள் தெருவில் தலைகாட்ட முடியாது" என்று 1967ல் பழைய காங்கிரஸ் தொண்டராக மாறி அண்ணாவுக்கு எதிராக எப்படியெல்லாம் பேசினர்... தி.மு. கழகத்தை எப்படியெல்லாம் தூற்றினர்...

யாரும் மறந்திருக்கமாட்டார்கள்!

தேவையானல் தொடர்ந்து நினைவூட்டுவோம்!

நடிகர் திலகம் அவர்களே...! வளர்த்த கடா நீங்கள்... வளர்த்தவர் அண்ணா ! அவர்மீதே பாய்ந்தீர்கள் ..

1967 தேர்தல் முடிவுதான் உங்களுக்குத் தெரியுமே...!

கலைஞர் கருணாநிதியிடம் உங்களுக்கு உள்ள பாசமும்.. சொன்ன சொற்களும் மறந்துவிடவில்லை

இப்போது சேர்ந்திருக்கிறீர்கள்; ஏதாவது பேசிவிட்டுப் போங்கள்! எங்களிடம் வம்புக்கு வந்தால்-

நா காக்காவிட்டால்... உங்கள் 'நா'வே உங்களுக்கு பதில் கூறும்!

-நாதன்

### தொழிலதிபர் மைக்கேல் நாடு திரும்பினர்

சென்னை, நவ. 1- ராயப்பேட்டை நெடுஞ்சாலையில் உள்ள ஹம்பர்ட் பர்னிச்சர் மார்ட்டின் அதிபராக இருப்பவர் மைக்கேல். பிரம்பு-பனை ஓலைப் பொருள்களால் தயாரான பொருள்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி வைத்தார். பாரிஸ் நகரில் நடந்த உலகப் பொருட்காட்சியில் மைக்கேலின் ஸ்டாலும் இடம் பெற்றிருந்தது. இந்த அரங்குக்கு விஜயம் செய்த வெளி நாட்டுப் பிரதிநிதிகள் தங்கள் நாடுகளுக்கு பிரம்பு-பனைஓலைப்பொருள்களை அனுப்புமாறு கேட்டனர். லண்டன் அரசு அழைப்பின் பேரில் மைக்கேல் ஐரோப்பிய நாடுகளுக்கு சென்று தற்போது தாயகம் திரும்பியுள்ளார்.

### தடை உத்திரவு நீடிப்பு

சென்னை, நவ. 1- சென்னையில் நேற்று (31-ந்தேதி)முதல் 15நாட்களுக்கு போலீசார் தடை உத்திரவு பிறப்பித்துள்ளனர் இந்த நாட்களில் போலீசாரின் அனுமதியின்றி ஊர்வலங்களோ பொதுக் கூட்டங்களோ நடத்தக் கூடாது.

போராட்டம் வாபஸ்;

# கழக அரசின் சிறப்பான அணுகுமுறை

### ஆசிரியர் கூட்டணி பாராட்டு

**சென்னை, நவ. 1- தமிழக அரசு சிறப்பான அணுகுமுறையை மேற்கொண்டு ஆசிரியர்களின் கோரிக்கையை ஏற்றது. போராட்டம் நிறுத்தப்படுகிறது என்று ஆசிரியர் கூட்டணி அறிவித்தது.**

ஆசிரியர் கூட்டணி பொதுச் செயலர் சு. ஈசுவரன் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:

அகவிலைப்படி உயர்வு, கிராமப்புற ஆசிரியர்களுக்கு ஊக்கப்படி ஆகிய இரண்டும் போராட்டம் தொடங்குவதற்கு முதல் நாளே அறிவிக்கப்பட்டது என்றாலும் எஞ்சிய கோரிக்கைகளுக்காக திட்டமிட்டபடி நாடு முழுவதும் மறியல் நடத்தப்பட்டது.

### வெற்றி கிடைத்தது

தற்போது இளநிலை ஆசிரியர்களை இடைநிலைக்கு உயர்த்துதல்,ஆரம்ப ஆசிரியர்களின் குழந்தைகளுக்கு இலவச பட்டப்படிப்பு, அரசு ஊழியர்களுக்கான சலுகைகளை ஆசிரியர்களுக்கு விரிவுபடுத்துதல், மருத்துவ சலுகை, உயர் படிப்பு படித்த ஆரம்ப ஆசிரியர்களுக்கு உயர்நிலை மற்றும் மேல் நிலைப் பள்ளிகளில் நியமனம் ஆகியவற்றை அரசு ஏற்று சட்டமன்றத்தில் கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அறிவித்துள்ளதை தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி வரவேற்கிறது.நன்றி பாராட்டுகிறது.

### தீர்க்க வேண்டியவை

இன்னும் தீர்க்கப்பட வேண்டியதும், சம்பளக் கமிஷனின் முடிவுகளில் ஏற்பட்ட குறைபாடுகளுமான, கிராமப்புற ஆசிரியர்களுக்கு வீட்டு வாடகைப்படி, தேர்வு நிலை, சிறப்பு நிலை ஆசிரியர்களுக்கு கூடுதல் ஊதிய உயர்வும், ஆசிரியர் பயிற்சிக்கான கூடுதல் ஊதியமும், தலைமை ஆசிரியர்களுக்கு தனி அலுவல் படி, கைத்தொழில் ஆசிரியர் பிரச்சினை, போனஸ் ஆகியவற்றை அரசு நியமித்துள்ள தனிநபர் குழுவிடம் இந்த யக்கம் தொடர்ந்து விவாதித்துப் பெற முடிவு செய்துள்ளது. அரசு அறிவிப்பை ஏற்று மறியல் போராட்டம் நிறுத்தப்படுகிறது.

### அணுகுமுறை

ஆசிரியர்கள் ஆயிரக்கணக்கில் மறியல் போராட்டத்தில் ஈடுபட்டதும் தமிழ்நாடு தொடக்

(8-ம் பக்கம் பார்க்க)

### மத்திய சென்னை எம்.ஜி.ஆர்.மன்ற தொகுதி நிர்வாகிகள் ஆலோசனைக் கூட்டம்

மத்திய சென்னை நாடாளுமன்றத் தொகுதியைச் சேர்ந்த தொகுதி நிர்வாகிகளின் ஆலோசனைக்கூட்டம் 4-11-79 ஞாயிறு அன்று மாலை 4 மணிக்கு 3 ஔவை சண்முகம் சாலை 2-வது சந்து (தலைமைக் கழகம் எதிரில்) நடைபெறும்.

மத்திய சென்னையைச் சேர்ந்த தொகுதி மன்ற நிர்வாகிகள் அனைவரும் தவறாமல் வருகைதருமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சி. வி. அன்புதம்பி,
செயலாளர்,
மத்திய சென்னை புரட்சித்தலைவர் எம்.ஜி ஆர். மன்றம்.

### பொய்செய்திக்கு மறுப்பு

சென்னை, நவ. 1- நெய்வேலி மருத்துவமனையில் ராசு என்பவர் தகாத முறையில் நடந்து கொண்டார் என்று அலை ஓசை செய்தி வெளியிட்டுள்ளது. அவருக்கும் கழகத்திறகும் சம்பந்தமில்லை அவர் சி. ஐ. டி. யூ. சங்கத்தைச் சார்ந்தவர். வேண்டுமென்றே அலை ஓசை செய்தியை திரித்து வெளியிட்டுள்ளது. இதை வன்மையாக கண்டிக்கிறோம் என்று நெய்வேலி 24-வது வட்ட அமைப்பாளர் துரை ராமகிருஷ்ணன் கூறியுள்ளார்.

சென்டிரல் கோ-ஆபரேடிவ்

### வங்கித்தலைவராக ராமகிருஷ்ணபாபு நியமனம்

சென்னை,நவ. 1-சென்னை மாவட்ட சென்டிரல் கோ-ஆபரேடிவ் வங்கியின் தலைவராக வழக்கறிஞர் ராமகிருஷ்ணபாபு, உறுப்பினர்களாக அங்கமுத்து, பா. வளர்மதி, பொன்னுசாமி, சண்முகம் ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

### லண்டன் கருத்தரங்கில் சுந்தரம்

சென்னை, நவ. 1- அக்டோபர் மாதம் 22-ம் தேதியிலிருந்து 26-ந்தேதி வரை லண்டனில் நடந்த வாசனைத் திரவியங்கள் ஏற்றுமதி வளர்ச்சி பற்றிய உலக நாடுகளின் கருத்தரங்கில் இந்திய நாட்டு பிரதிநிதியாக ஏலக்காய் வாரியத்தின் தலைவர் எஸ். ஜி. சுந்தரம் கலந்து கொண்டு உரை நிகழ்த்தினர்.

(6ம் பக்கத் தொடர்ச்சி)

கப்பள்ளி ஆசிரியர் கூட்டணி நியாயமான கோரிக்கைகளுக்காக அரசியல் சார்பற்று கட்டுப்பாடாக போராடுகிறது என்பதை தமது பேச்சு வார்த்தையில் குறிப்பிட்டதும் பள்ளிக்கல்வி இயக்குநர் ஒத்துழைப்பும் ஆசிரியர்களை மதிப்பிற்குரியவர்களாக நடத்திய நீதித்துறை சிறப்பான பாதுகாப்புத் தந்த காவல்துறை ஆகியவை மூலம் இந்த அரசு சிறப்பான அணுகுமுறையைக் கொண்டதையும் ஆசிரியர் கூட்டணி பாராட்டுகிறது.

இவ்வாறு சு. ஈசுவரன் தெரிவித்துள்ளார்.

### திரிசூலம் பொதுக்கூட்டம் அமைச்சர் ஆர்.எம். வீ. பேசுகிறார்

நாள் : 4 11 79 ஞாயிறு மாலை 6 மணி
இடம்: மங்களவிநாயகர் கோவில்திடல் (சென்னை-43)
தலைமை: சி. சண்முகவேலு
சிறப்புரை: அமைச்சர்
ஆர். எம். வீ.
பேரவைச் செயலர் ஆனா ஜெகதீசன்
கே. எம். அப்துல் ரசாக் எம் எல் ஏ
சைதை தமிழ்ச்செல்வன், எஸ். எம். துரையரசன், மு. பச்சையப்பன். தஞ்சை பசுபதி, சின்னகருப்பாயி, கனி, சண்முகராசு மற்றும் பலர்.

தங்கமணி பப்ளிகேஷனுக்காக 275. அவ்வை சண்முகம்சாலை, சென்னை-600014 என்ற முகவரியிலிருந்து கே. ரவீந்திரனல் வெளியிடப்படுகிறது. அச்சிடுபவர் பி. தங்கராஜன். 'நவசக்தி' அச்சகம் சென்னை-600004 ஆசிரியர்: எம். ஜி. சக்ரபாணி.

# நமக்கு அது பச்சைக்கொடி

புரட்சித்தலைவர் அவைக்கு வராதது பற்றி மகிழ்ச்சியோடு பெட்டிச் செய்தி வெளியிட்டிருக்கிறது முரசொலி.

புரட்சித்தலைவர் "பசும்பொன்" சென்று மறைந்த மறவர்குல மாணிக்கம் முத்துராமலிங்கத் தேவர் பிறந்ததின விழாவில் கலந்துகொண்டார்.

"எம். ஜி. ஆர். அவைக்கு வரவில்லை" என்று செய்தி போடுகிற நபர்கள் "எம். ஜி. ஆர். தேவர் சமாதிக்கு அஞ்சலி செலுத்தப்போய் விட்டார்" என்பதையும் சேர்த்துப் போட்டிருந்தால், அவர்களின் யோக்கியத்தனம் புலனாகி இருக்கும்.

**மு. ஒலி கும்பல்தான் இன்றைய பொய்யை நாளைய வரலாருக்கும் தில்லு முல்லு கும்பலாயிற்றே!**

கருணாநிதியும்தான் எதையோ சாப்பிட்டு விட்டு வயிற்றுப்போக்கு என்று ராமநாதபுரத்திலிருந்து ஓடி வந்தார். வயிற்றுப் போக்கால் சபைக்கும் வராமல் இருந்திருக்கிறார். நாமென்ன தில்லுமுல்லுச் செய்தியா போட்டோம்?

**"இனி எப்படி வேண்டுமானாலும் எழுது" என்று மு. ஒலித் தோழர்கள் நமக்குப் பச்சைக் கொடி காட்டி இருக்கிறார்கள்!**

- கமலபதி

இந்திராகாந்திக்கு டாக்டர் நாவலர் பதில்

# உறுதிகொடுத்துவிட்டு பின் வாங்கியது யார்?

## "சொந்த நலனுக்காக கட்சியை அழிக்கிறார் கருணாநிதி"

சென்னை, நவ. 1- "உறுதி கொடுத்துவிட்டு பின்வாங்கியது யார் என்று அடுக்கடுக்கான ஆதாரங்களை வைத்து இந்திராவுக்கு கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் பதிலளித்தார்.

கருணாநிதி தனது சொந்த நலனுக்காக தி.மு.கழகத்தை அழித்து வருகின்றார். மூன்று மாதங்களுக்கு முன்பு காஷ்மீர் கரடி, ரத்தக் காட்டேரி என்று வர்ணித்த கருணாநிதி இன்று இந்திராவுடன் கூட்டுச் சேர்ந்துள்ளார் என்றும் நாவலர் கூறினார்.

அம்பத்தூர் காமராஜ் பூங்கா அருகே பிரும்மாண்டமான கழகப் பொதுக் கூட்டம்நடந்தது சி. டி- விஜயன் தலைமை வகித்தார். கழகப் பொது செயலாளர் டாக்டர் நாவலர், கஸ்தூரிபாலன், கொ. அ. ஜார்ஜ், வழக்கறிஞர் ஏ. சி. டி. பிரபாகரன், தர்மலிங்கம், ஆர். எஸ். மணி, திருவேங்கடம் நடராசன், ராமலிங்கம், கே.கே. ராவ் ஆகியோர் பேசினர்.

கழகப் பொதுச் செயலாளர் டாக்டர் நாவலர் பேசியதாவது:-

சுவரொட்டிகள் மீது சுவரொட்டியை ஒட்டி இந்தக் கூட்டத்துக்கு மக்கள் வரக்கூடாது என்று தி. மு. க.வினர் முயற்சி செய்த போதிலும் அவற்றைப் பொருட்படுத்தாமல் அதிக அளவில் இந்தக் கூட்டத்திற்கு வந்திருக்கிறீர்கள்.

கருத்தை கருத்தால் எதிர்க்க முடியாதவர்கள், எழுத்தை எழுத்தால் சந்திக்க முடியாதவர்கள் வன்முறைச் செயலில் ஈடுபட்டு வருகிறார்கள்.

வேறு வேலையில்லை என்ற காரணத்தால் அவர்கள் சுவரொட்டிகளை கிழிக்கின்றனர்.

### 260 போராட்டங்கள்

ஆட்சிப் பொறுப்பை ஏற்ற முதல்வர் புரட்சித் தலைவர் தந்தை பெரியார் பேரறிஞர் அண்ணா வழியில் நேர்மையாய், தூய்மையாய் லஞ்ச லாவண்ய மற்ற மாசுமறுவற்ற ஆட்சியை நடத்திக் கொண்டு வருகிறார்.

கூச்சல் குழப்பம் உண்டாக்கி அதன்மூலம் ஆட்சி கவிழாதா என்று எண்ணி கருணாநிதி 260 போராட்டங்களை நடத்தினார்.

இத்தனை போராட்டம் நடத்தியும் முதல்வர் புரட்சித்தலைவரின் செல்வாக்கை கடுகளவாவது- எள்ளளவாவது குறைக்க முடிந்ததா என்றால் இல்லை.

தனித்தனியாகவும்- கூட்டுச் சேர்ந்தும் போராட்டம் நடத்தினார், வெற்றி பெற முடியவில்லை.

மதுரை மாநகராட்சித் தேர்தலின்போது "நான் வீட்டு நாய் மாதிரி" என்றார் கருணாநிதி.

"அடித்தாலும் உங்களையே சுற்றிச் சுற்றி வருவேன்" என்றார். அடியை வாங்கிய பிறகும் சுற்றி வருவேன் என்றார் கருணாநிதி. இப்படிச் சொன்ன பிறகும் அவருக்குகிடைத்த இடங்கள் 5- நமக்குக் கிடைத்தது 50 இடங்கள்.

### கெடுவான் கேடு நினைப்பான்

இந்த ஆட்சியை எப்படியும் அசைக்க வேண்டும் என்று கருணாநிதி நினைத்தார், அவரால் இந்த ஆட்சியை அசைக்க முடியவில்லை.

இந்திரா பெருமைப்பட வேண்டும் என்பதற்காக, இங்கிருந்து ஒருவரை இழுத்துப் பார்த்தார். "கெடுவான் கேடு நினைப்பான்" என்றபடி இரண்டு தானாக வரவில்லையா?

கபாலி வந்தார். அரங்கசாமியும் வந்துவிட்டார் இன்னும் இரண்டு மூன்று பேர் வரவிருக்கிறாகள். பலர் வரப்போகிறார்கள். கருணாநிதி தன் செயலால் தி. மு. க. வை அழித்து வருகிறார்.

### போஸ் மகன் பாராட்டு

இன்றைய தினம் மேற்கு வங்காளத்திலிருந்து வந்த சுபாஷ் சந்திர போசின் சகோதரர் மகன் டி. என். போஸ் இந்த ஆட்சியைப் பற்றி பாராட்டிப் பேசியிருக்கிறா அகில இந்திய பார்வார்டு பிளாக் கட்சியின் தலைவராக அவர் இருக்கிறார்.

இந்தியாவிலேயே லஞ்ச ஊழல் இல்லாத ஆட்சியை முதல்வர் புரட்சித்தலைவர் நடத்துகிறார். மற்றமாநில முதல்வர்கள் அவரைப்பின் பற்றி நடக்க வேண்டும் என்று அவர்கூறியிருக்கிறார் நாடு நிம்மதியாக இருக்கும்போது கருணாநிதியின் போராட்டம் எங்கே வெல்லும்.

தொழிலாளர்களுக்கு எந்தகுறையைச்செய்தார் முதல்வர் புரட்சித்தலைவர்

54 நாட்கள் நூற்பாலைகள் வேலை நிறுத்தம் செய்தனர் இதனால் ஏற்பட்ட உற்பத்திஇழப்பு110கோடி ரூபாய் நாட்டுக்கு நட்டம் ஏற்படுத்தும் முயற்சியில் யார் இறங்கியது.

தொழிலாளர்களுக்கு கிடைக்க வேண்டிய சம்பளம் 18 கோடியே 15 லட்சம் ரூபாய் நஷ்டம் வரிகள் மூலமாக மத்திய அரசுக்கு கிடைக்க வேண்டிய தொகையான 4 கோடியே 40 லட்சம் ரூபாய் நஷ்டம் விற்பனை வரியாக மாநில அரசுக்கு கிடைக்க வேண்டிய தொகை நஷ்டம்.

தூண்டி விட்ட தொழிற் சங்கத் தலைவர்கள் நன்றாக இருந்தார்கள். பாதிக்கப்பட்டது யார்?

### தொழிலாளியின் நலன் காக்கும் அரசு

பம்பாயில் பஞ்சாலை, நூற்பாலைகளில் பணிபுரியும் சாதாரண தொழிலாளிக்கு குறைந்த பட்ச சம்பளம் 480 ரூபாய் மேற்கு வங்கத்தில் 453-ரூபாய் மத்தியப் பிரதேசத்தில் 438 ரூபாய் உத்தரப் பிரதேசத்தில் 470-ரூபாய் தமிழகத்தில் 541-ரூபாய்.

ஜோதிபாசு ஆளும் மாநிலத்தைவிட தமிழகத்தில் அதிக பணம் கொடுக்கப்படுகிறது. கண்டனக் கூட்டம் நடத்துகிறீர்களே ஏன்?

டெல்லியிலும், மற்ற மாநிலங்களிலும் நிலையான அரசுகள் இல்லாத நேரத்தில் தமிழகத்தில் நிலைத்த உறுதியான ஆட்சியை நடத்துபவர் முதல்வர் புரட்சித்தலைவர்.

திண்டுக்கல் தேர்தலில் டெபாசிட் இழந்த இந்திரா காங்கிரஸ் நடந்து முடிந்த நாடாளுமன்றத் தேர்தலில் அனைத்திந்திய அண்ணா தி. மு. க. வுடன் 15 இடங்களில் சேர்ந்து நின்றதில் 14 இடங்களில் வெற்றி பெற்றது. முன்பு அதற்கு எங்கே சொந்த செல்வாக்கு இருந்தது?

கருணாநிதியுடன் கூட்டுச் சேர்ந்ததால் இருப்பதையும் இழந்துவிடப் போகிறார். கருணாநிதியை நம்புகிறோம் என்கிறார் இந்திரா நம்புங்களேன்- எங்களுக்கு எந்த கஷ்டமுமில்லை.

தி.மு.க.தான் இந்திரா காங்கிரஸ் கட்சியை எதிரிக் கட்சியாக நினைத்து செயல் பட்டது.

நீங்கள்தான் ஒருவரையொருவர் அழிக்கப்பார்த்தீர்கள்.

காஷ்மீரக் கரடி என்று இந்திராவைக் கூறியது யார்? 1977ம் ஆண்டு அக்டோபர் மாதம் என்ன நடந்தது? இந்திராவைக் கல்லால் அடித்தார்கள், நெடுமாறன் ரத்தம் சிந்தினார். சித்தன் கண்ணில் காயம் பட்டது.

6 ஜீப்புகள் கொளுத்தப் பட்டன. 15 கார்கள் அழிக்கப் பட்டன. 215 பேர் மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர்.

இடது சாரி கட்சிகளாகயிருந்தாலும் ஜனதாவாக இருந்தாலும் நாங்கள் கொள்கையில் வேறுபட்டு இருந்தோமே தவிர அவர்களுடன் எதிரிக் கட்சியாக என்றும் செயல் படவில்லை.

கடற்கரைப் பொதுக் கூட்டத்தில் பேசும்போது இந்திராகாந்தி உறுதி மொழி கொடுத்துவிட்டு பின்வாங்கிய கட்சி அனைத்திந்திய அண்ணா தி.மு.க. என்று கூறியிருக்கிறார்.

1977-ம் ஆண்டு தேர்தலுக்கு முன்பு-சிக்மகளூர் தேர்தலுக்கு முன்பு கூறியிருந்தால் சரி என்று கூறலாம்,

நாங்கள் எங்கே உறுதி மொழி கொடுத்துவிட்டு பின் வாங்கினோம்! இந்திரா தஞ்சையில் நிற்கட்டும் என்று நானோ புரட்சித்தலைவரோ என்றாவது சொன்னோமா?

எஸ்.டி.எஸ். வென்ற தொகுதி தஞ்சை. பொதுத் தேர்தலில் நின்று வென்றகட்சிதான் இடைத் தேர்தலுக்கும் நிற்க வேண்டும். பெருந்தன்மை காரணமாக நாகை கஷ்டமாக இருக்கும் என்பதால் தஞ்சையைத் தருகிறேன் என்றார். இந்தப்பெருந்தன்மையைக் காப்பாற்றியது தவறா!

### நடந்தது என்ன?

காங்கிரசுக்கு தருகிறோம் என்று சொன்னோமே தவிர இந்திராதான் நிற்கவேண்டும் என்று சொன்னோமா?

தஞ்சை இடைத்தேர்தலின் போது என்ன நடந்தது என்று 1-7-79 அன்று ஆர், வி. சாமிநாதன் 'துக்ளக்' இதழுக்கு பேட்டியளித்துள்ளார்.

இந்திரா காந்தி தஞ்சையில் போட்டியிட வேண்டும் என்று ஸ்டீபனும், மூப்பனாரும் ஐடியா செய்தார்கள்.

அம்மையாரை நிற்கச் சொன்னால் என்ன என்று ஸ்டீபன் ஆர். வி. சாமிநாதனிடம் கேட்டிருக்கிறார்.

அப்படி செய்வதாக இருந்தால் நான் எம். ஜி. ஆரிடம் பேசுவேன் எம். ஜி. ஆர், ஆதரவு கொடுத்தால்தான் தைரியமாக நிற்கலாம் என்று சொல்லியிருக்கிறார். ஆர், வி, சாமிநாதன்.

### பண்பு எங்கே?

நான் அத்துடன் விட்டு விட்டேன் என்று சொல்லியிருக்கிறார். ஆர். வி. சாமிநாதன் அதற்கு பின்னர் ஸ்டீபன், ', நான் சொல்லி அவரை (இந்திரா காந்தியை) நிற்க வைக்கிறேன் என்று கூறியிருக்கிறார்.

"9ந் தேதி தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் கட்சி செயற்குழுவைக் கூட்டி இந்திராவை அழைப்பது என்று தீர்மானித்திருந்தோம்' என்று கூறியிருக்கிறார் ஆர்.வி.எஸ்.

இங்கே...எங்கே முதல்வர் புரட்சித் தலைவர் வந்தார். முதல்வர் புரட்சித் தலைவரை சந்தித்த போது நிலைமைகள் என்ன என்று கேட்டார். நிலைமைகள் இப்படி.

நீங்கள் நின்றால் கருணாநிதியே நிற்பார். இல்லையென்றால் அன்பில் தர்மலிங்கம் நிற்பார் என்று கூறியிருக்கிறார். பல்வேறு நிலைமைகளை கூறியிருக்கிறார்.

பல்வேறு அறிஞர்கள் இருந்த சட்டமன்றத்தில் 'மைக்'கை உடைக்கிறார்கள். ஒருவர் செருப்பை எடுக்கிறார்.

உண்மையான அண்ணாவின் தம்பிகள் இதைச் செய்ய மாட்டார்கள், கருணாநிதியின் உடன்பிறப்புக்கள்தான் இப்படிச் செய்வார்கள்.

இறந்தவர் வீட்டுக்கு வந்தவர்களை மரியாதைக் குறைவாகநடத்தினார்கள். காக்கைக்கு இருக்கும் பண்புகூட கருணாநிதி கட்சியினருக்கு இல்லையே

"என் வாழ்நாளில்நடக்கக்கூடாதது நடந்துவிட்டது" என்று மேலவையில் 74 வயதான சிலம்புச் செல்வர் கூறினார்.

இவ்வளவுபண்புகொண்டவர்கள் தேர்தலில் எப்படி நடப்பார்கள் என்றும கூறினார்.

இருக்கிற நிலைமைகளை புரட்சித்தலைவா சொன்னார் நிற்பதா- இல்லையா எனபதை நீங்கள் அல்லவா முடிவு செய்ய வேண்டும். சிங்கார வடிவேலுவுக்கு பதிலாக நீங்கள் (இந்திரா) நின்றிருக்கலாமே! ஏன்: செய்ய வில்லை?

எங்களை காலை வாரிவிட்டார் என்று கூறியிருக்கிறார், உங்கள் காலை வாரும் அளவுக்கு உங்களது கால் அவ்வளவுபலவீனமானதா? உறுதியாக நிற்கமுடியாத காலா?

மூப்பனார்-ஸ்டீபன் ஆகியோர் எப்படியாவது இந்திரா காந்தியை நிற்க வைக்க வேண்டும் என முடிவு செய்தார்கள் என்று ஆர்.வி. சாமிநாதன் கூறியிருக்கிறார்.

### பின் வாங்கியது யார்?

குடியரசுத் தலைவர் பதவிக்கு சஞ்சீவரெட்டியை முன் மொழிந்துவிட்டு பின் வாங்கியது யார்? வாக்குறுதியை மீறி மறைமுகமாக செயல் பட்டது யார்? நிஜலிங்கப்பா காமராஜர் பிரியக் காரணம் என்ன?

சரண்சிங் 75 வாக்குகளை சேர்த்து வைத்திருந்தார். நீங்கள் 74 வாக்குகள் தருகிறேன் அதுவும் நிபந்தனையற்ற ஆதரவு தருகிறேன் என்று சொன்னீர்கள் தந்தீர்களா?

சரண்சிங் காலை வாரியது யார்? நம்பியவர்களுக்கு வாக்குறுதி கொடுத்துவிட்டு மீறலாமா?

சரண்சிங்கை கவிழ்த்தது நீங்களா-நாங்களா?

அந்த ஆட்சி முடிய இருந்தது, அதனால் 2 மாதங்களுக்கு முன்பே அனுப்பினேன் என்று கூறுகிறீர்கள்,

நாடாளுமன்றத்தில்இது குறித்து நிகழ்ந்த விவாதத்தில் நீங்கள் பேசிய பேச்சுக்கள் அப்படியே ரிகார்டுகளாக உள்ளன.

லஞ்ச ஊழல், அதிகார துஷ்பிரயோகம் காரணமாக தி. மு. க. அரசை டிஸ்மிஸ் செய்தேன் என்று கூறியிருக்கிறீர்கள்

ஆட்சியைக் கவிழ்த்த 3வது நாள் சர்க்காரியா கமிஷனை நியமித்து இருக்கிறீர்கள்.

கல்யாணசுந்தரம், புரட்சி தலைவர் அளித்த புகாரின் பேரில் தான் ஆட்சியை கவிழ்த்தேன் என்று கூறியிருக்கிறீர்கள் அவர்கள் 1972-ம் ஆண்டு டிசம்பர் மாதம் புகார் அளித்தனர் நான்கு ஆண்டுகள் போன பிறகு 1976ம் ஆண்டு பிப்ரவரி 3-ந் தேதி சர்க்காரியா கமிஷனை கொண்டு வந்தீர்கள்.

"நான் இந்திராவை வற்புறுத்த வில்லை, அப்போது நான் மேற்கு ஜெர்மனியில் இருந்தேன்" என்று கல்யாணசுந்தரம் கூறியிருக்கிறார்.

### கருணாநிதி பேசியது என்ன?

இந்திரா பேசினாலும் பொருத்தமாக பேசவேண்டுமல்லமா!

உறுதியான-தெளிவற்ற நிலையற்ற முடிவுக்கு வந்தது நீங்களா? நாங்களா?

கூட்டு பற்றி பேசும் கருணாநிதி 3 மாதங்களுக்கு முன்பு என்ன சொன்னார்? கடுமையாக இந்திரா காங்கிரசை விமர்சனம் செய்து பேசியிருக்கிறா

செப்டம்பர் 30-ந் தேதி நடந்த கூட்டத்தைப்

(4-ம் பக்கம் பார்க்க)

# பொதுத் தேர்தலில் 35 இடங்களில் கழக அணி வெற்றி பெறும்

வேலை நிறுத்தம் செய்துவரும் காவல் துறையினர்வெறியாட்டம்: திமுகதூண்டுதல்

# கழக அமைப்பாளர் ஜெயக்கொடி மீது கோரத் தாக்குதல்

மதுரை, நவ. 1-வேலை நிறுத்தம் செய்து வரும் காவல் துறையினர் திருமங்கலத்தில் நடத்திய வன்முறை கொலை வெறியாட்டத்தின் விளைவாக திருமங்கலம் தொகுதி கழக துணை அமைப்பாளர் ஜி ஜெயக்கொடி மிருகத்தனமாக தாக்கப்பட்டு இடது கால் முறிந்துள்ளது.

அவரது உடம்பு முழுவதும் பட்டை பட்டையாக அடிபட்ட காயங்கள் இருக்கின்றன.

வேலைநிறுத்தம் செய்து வரும் காவல்துறையினர் ஜெயக்கொடியின் உடலில் நடத்திய வன்முறைத் தாக்குதலின்கோரவிளைவை நேற்று இரவு முதல்வர் புரட்சித்தலைவர் பார்த்து கண்ணீர் விட்டார்.

திருமங்கலம் தொகுதி துணை அமைப்பாளர் ஜெயக்கொடியை வன்முறையாளர்கள் கண் மண் தெரியாமல் தாக்கி இருக்கிறார்கள்.

இந்தச் சம்பவம் எப்படி நடந்தது என்பது பற்றி ஜெயக்கொடி கூறியதாவது:-

கடந்த 24-ந்தேதி இரவு எதிர்க் கட்சியினர்கூட்டம் போட்டு புரட்சித் தலைவரை தரக்குறைவாகத் தாக்கிப் பேசினார்கள்.

வேலை நிறுத்தம் செய்து வரும் காவல்துறையினர் ஒருவர் என்னிடம் வந்து என்னை வம்புக்கு இழுத்தார்.

26ம் தேதி உங்கள் மந்திரிசபை டிஸ்மிஸ் ஆகிவிடும் என்று சொல்லி வம்புக்கு இழுத்தார்.

இப்படி நிதானம் இல்லாமல் பேசாதீர்கள் என்று சொல்லிவிட்டு வீட்டுக்குப் போனேன்.

சாப்பிட்டுவிட்டு வெளியே வந்தபோது வேலை நிறுத்தம் செய்து வரும் 25 போலீஸ்காரர்கள் கம்பு, விறகுக் கட்டைகளை கையில் எடுத்துவந்து என்னை தாக்கினார்கள்.

நான் பலமாக தாக்கப்பட்டேன். உயிரைக்காத்துக்கொள்ள ஒரு வீட்டுக் கூரைமீது ஏறி தப்பினேன்.

என்னைத்தேடி என் வீட்டுக்குச் சென்று என் வீட்டில் இருந்த பெண்களைக் கேவலமாகப் பேசி இருக்கிறார்கள்.

உயிர் தப்பிய நான் மருத்துவ சிகிச்சைக்குச் சென்றேன். இது குறித்து புகார் கொடுத்து இருக்கிறேன்.

இடது கால் எலும்பில் 2 செண்டிமீட்டர் அளவு விரிசல் ஏற்பட்டு இருக்கிறது.

இவ்வாறு ஜெயக்கொடி கூறினார்.

கால் கட்டோடும், உடல் முழுக்க ரத்தக் காயங்களோடும் இருந்த ஜெயக்கொடியைப் பார்த்து முதல்வர் புரட்சித்தலைவர் கண்ணீர் வடித்தார்,

# அண்ணா



## இந்திரா காந்திக்கு டாக்டர் நாவலர் பதில் (3-ம் பக்கத் தொடர்ச்சி)

பற்றி முரசொலியில் எழுதுகிறார்,

"அன்று வெறி பிடித்த காஷ்மீரக் கரடி"

இன்று தேன்பாகு ஒழுகுகிறது.

அன்று எழுதினார் 'இந்திரா காந்தி இட்லரின் தங்கையல்ல. அக்காள்' என்று

இப்போது அவருக்கு (இந்திராவுக்கு) தம்பி இவர்! இவருக்கு (கருணாநிதிக்கு) அக்கா அவர்.

"ஆணவமே உருவான பெண் உருவம்"

"இட்லர்-முசோலினிக்கு சற்றும் இளைக்காத சண்டிராணி"

"நாட்டில் நடமாடுவது இந்திராவா அல்லது இந்திராவின் பேயா"

என்று முன்பு கேட்டவர்-

கூட்டு எப்படியிருக்கிறதாம் என்றால் "கன்னலென, கற்கண்டு சாறுஎன, தித்திக்கும் தேன்பாகு என பிரிந்தோர் கூடி கலந்திடும் நட்பு மீண்டும் உதயமாயிற்று..." என்று கூறியிருக்கிறார்.

பொரியல் இல்லையாம்- அவியல் இல்லையாம் கூட்டாம்!

ஆனால். அதற்கு முன்பு- இரண்டரைமாதங்களுக்கு முன்பு என்ன பேசினார்.

இந்திரா ஆட்சி கறைபடிந்த ஆட்சி என்று விமர்சித்தார். இன்று கற்கண்டு தேன் பாகு என்று கூறுகிறார்.

இப்போது "தித்திக்கும் தெள்ளமுது" என்று பேசுகிறார்,

'இந்திரா வரவேற்கக் கூடிய தலைவரல்ல' என்று பேசிய நீங்கள் ஏன் வரவேற்கிறீர்கள்.

உங்களது கூற்றுப்படி இளிச்சவாயர்கள் யார்? மக்களல்ல நீங்கள் தான்!

சொன்ன சொல்லை மாறமாட்டார் அதனால் கூட்டு சேருகிறோம் என்கிறீர்கள் சேருங்கள் யார் வேண்டாம் என்று சொன்னது?

1-7-79 துக்ளக்கில் தமிழ் கருணாநிதி பேட்டியும் வந்துள்ளது.

அதில் ச்சோ ஒரு கேள்வி கேட்கிறார்.

இனி திமுக- இந்திரா காங்கிரஸ் உறவு ஏற்படும் வாய்ப்பு உண்டா என்ற கேள்விக்கு கருணாநிதி பதில் அளிக்கிறார்

"உங்கள் கற்பனை அபாரமானது! தோற்றாலும் ஜெயித்தாலும் சர்வாதிகாரத்துக்கு நாங்கள் என்றுமே துணை போகமாட்டோம். எதிர்ப்போம்.

எதிர்த்த காரணத்தால்தான் சர்க்காரியா கமிஷன் அமைத்தார். மிசாவுக்கே சரணடையாத நாங்கள் இப்போது சரண் அடையமாட்டோம்"

-என்றார் கருணாநிதி

### சரணாகதி படலம்

அப்படிச் சொன்ன இந்த வீரர்தான் கேவலம் தேர்தல் வெற்றிக்காக இந்திராவிடம் சரண் அடைந்துள்ளார்.

கொடுக்கிற இடத்தில்தான் பேரறிஞர் அண்ணா என்றும் இருந்தார். அவர் பார்த்துத்தான் பல இடது சாரிகட்சிகளுக்கும், அகில இந்தியக் கட்சிகளுக்கும் இடங்கள் கொடுத்தார்.

நீங்கள் (கருணாநிதி) வாங்கும் இடத்தில் இருக்கிறீர்கள்,

முதல்வர் புரட்சித்தலைவர் கொடுக்கிற இடத்தில் இருக்கிறார், அவர்கள் பார்த்துக் கொடுக்கும் இடத்தில் கருணாநிதி இருக்கிறார்.

மிசா காலத்து தீரர் சொல்கிறார் "நீங்கள் எடுத்துக் கொண்டு நீங்கள் பார்த்து எனக்குத் தாருங்கள்" என்று கேட்கிறார். திராவிடர் இயக்கத்துக்கு மதிப்பு அளிக்கும் இடம் இதுதானா?

அவருக்கு கிடைக்கும் 17 இடங்களில் பார்வர்டு பிளாக்-முஸ்லீம் லீக் கம்யூனிஸ்டு, கிறிஸ்துவ ஜனநாயக முன்னணிக்கு பிரித்துக் கொடுக்கும் நிலையில் உள்ளார்.

நாம் நமது கொள்கையில் உறுதியாக உள்ளோம்

அவர் (கருணாநிதி) சொல்கிறார் "நான் இன்னொன்று கூட அவர்களுக்கு (இந்திரா காங்கிரசுக்கு) கொடுப்பேன் இவர்களுக்கு என்ன"? என்று கேட்கிறார்.

கொடுங்கள் யார் வேண்டாம் என்று சொன்னது! 17 யுமே கொடுத்து விட்டு சும்மா இருங்கள் அது உங்கள் இஷ்டம்.

திமுகவுடன் இந்திரா காங்கிரஸ் கொண்டுள்ள தேர்தல் உறவு தற்கொலைக்கு சமம். இந்த உறவு கூடாது குளிக்கத் தண்ணீர் கிடைக்கா விட்டால் கூவம் ஆற்றில் குளிப்பது என்று குமுதம் எழுதியிருக்கிறது.

"யாருடன்-யார் கூட்டு சேருவது என்ற விவஸ்தையில்லாமல் போயிருக்கிறது வடதுருவமும் தென் துருவமும் கூட்டு சேருகிறது" என்று ஆனந்தவிகடன் எழுதியிருக்கிறது.

அவர்களுக்குள்ளே கருத்து வேறுபாடுகள்.

"திமுகவுடன் இந்திரா காங்கிரஸ் கூட்டு சேர்ந்ததை எல்லோரும் வரவேற்பார்கள் என்று கூற மாட்டேன், எல்லோரும் ஏற்கவேண்டும். இல்லையென்றால் கட்சியை விட்டு விலகவேண்டும்" என்கிறார் இந்திரா காங்கிரஸ் கட்சியின் துணைத் தலைவர், ஏ. கே. சண்முகசுந்தரம்

எப்படிப்பட்ட தேர்தல் தந்திரம் பார்த்தீர்களா?

"இந்தக்கூட்டு இந்திராவின் கட்டளை ஏற்றுக் கொள்ளவேண்டும் என்கிறார் திண்டிவனம் ராமமூர்த்தி.

ஏன் கருணாநிதியே தஞ்சையில் திராவிடர் கழக கூட்டத்தில் பேசியிருக்கிறார்.

"உங்களுக்கு உடன்பாடானமுடிவாக இருக்காவிட்டாலும்..."

கருணாநிதிக்கே தெரிகிறது.

### வெற்றி நமதே

தமிழ் சமுதாயத்தைக் காட்டிக் கொடுக்காத வகையில் கருணாநிதி செயல்படுவான், நம்புங்கள் என்று கேட்கிறார்.

நடந்தவைகள் நடந்தவையாக இருக்கட்டும். இனி நடப்பவைகள் நல்லவையாக இருக்கட்டும் என்கிறார்.

இதுவரை நல்லது நடக்கவில்லை என்று அவரே ஒத்துக் கொள்கிறார்.

இந்திரா காங்கிரஸ்கட்சியினர் நம்மை பழிவாங்கினார்களே என்று தி.மு.க. வினர் பலர் துடித்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவர்களுடன் சேரலாமா என்று அவர்கள் மனம் படாதபாடுபடுகிறது.

அனைத்திந்திய அண்ணா தி.மு.க. ஜனதா- அணி குறைந்த பட்சம் 35 இடங்களைப் பெற்று வெற்றி பெறும்"

இவ்வாறு டாக்டர் நாவலர் கூறினார்.